# திருப்புகழமிர்தம்.

மலர் 19 | ஜய பங்குனி | இதழ் 12



திருமுருக: கிருபானந்தவாரி
திருப்புகழமிர்தம் அச்சகம்
No.144, சாமிநாயகன் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2

உ

முருகா

# திருப்புகழமிர்தம்-ஜய ஆண்டு

## பொருளடக்க அட்டவணை

விஷயங்கள் — பக்கங்கள்

### திருப்புகழ்

(பதவுரை, பொழிப்புரை, விரிவுரை, கருத்துரையுடன்)



### பெரியபுராணம்





### வரலாறுகள்



### கற்பு



### பிற கட்டுரைகள்

## வேண்டுகோள்

மக்களுடைய பண்பாட்டையும் மதி நலத்தையும் வளர்ப்பதற்காகவே நமது திருப்புகழமிர்தம் திருவருள் துணை கொண்டு நடந்துவருகின்றது. போதுமான சந்தா இல்லை. வரவர சம்பளச் செலவு, வாடகைச் செலவு முதலியவை அதிகமாகி வருகின்றன.

ஆகவே நமது சந்தாதாரர்கள் அன்பு கூர்ந்து. ஒவ்வொருவரும் ஒன்றுக்குக் குறையாமல் புதிய சந்தாதாரர்களைச் சேர்த்து உபகரிக்குமாறு வேண்டுகின்றேன். அது நமது சமய வளர்ச்சிக்குச் செய்த தொண்டு ஆகும்.

அன்பன்
**கிருபானந்தவாரி.**

---

## வானொலியில் ஆசிரியர்

ஆசிரியர் திருமுருக **கிருபானந்தவாரி** அவர்கள், **தமிழ் ஆண்டுப் பிறப்பாகிய** இன்பகரமான மன்மத ஆண்டு **சித்திரைத்** திங்கள் **க-ம் நாள்** (14—4—55) வியாழக்கிழமை அன்று இரவு *9-30* முதல் *10-30* வரை சென்னை அகில இந்திய வானொலியில் "**கிழவியும், குழவியும்**" என்பது பற்றி அரிய சொற்பெருக்கு ஆற்றுவார்கள். அன்பர்கள் கேட்டு மகிழ்க.

---

## சந்தா நேயர்களுக்கு

முருகவேள் திருவருள் துணைகொண்டு நடந்துவரும் நமது திருப்புகழமிர்தத்துக்கு இந்தப் பங்குனி இதழுடன் பத்தொன்பதாவது ஆண்டு நிறைவடைகின்றது. மன்மத சித்திரை முதல் இருபதாவது ஆண்டு தொடங்குகின்றது.

**அடுத்துவரும் மன்மத ஆண்டுச் சந்தாவை உடனே அனுப்பிவைக்க வேண்டுகின்றேம். 6-4-55க்குள் நமக்குச் சேருமாறு சந்தாத் தொகையை அனுப்பிவிடுவது நல்லது.**

மணியார்டர் பாரத்திலுள்ள கூபனில் சந்தா நேயர்கள் விலாசத்தைத் தெளிவாக எழுதியனுப்பவேண்டியது மிகமிக அவசியம். இல்லையேல் காலத்தில் புத்தகம் கிடைக்காது.

இலங்கையன்பர்கள் மணியார்டர் மூலம் சந்தாத் தொகையை அனுப்பவேண்டும். V. P. அனுப்புவதானல் மூன்று ரூபாய் ஆகும். திருப்பியனுப்பமாட்டோமென்று உத்திரவாதக் கடிதம் அனுப்பவேண்டும்.

மானேஜர், **திருப்புகழமிர்தம்,**
144, சாமிநாயக்கன் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2.



உ
ஓம் குஹாய நம:

# திருப்புகழமிர்தம்
## சிறந்த மாத வெளியீடு



"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"

**மலர் 19**

சய ஹு சித்திரைமீ முதல் பங்குனிமீ வரையில்
(1954 ஹு ஏப்ரல் மீ முதல் 1955 ஹு மார்ச்சு மீ வரையில்)



திருப்புகழ்த் தொண்டன்
**கிருபானந்தவாரி**

"**திருப்புகழமிர்தம்**" காரியாலயம்,
சிந்தாதிரிப்பேட்டை, :: சென்னை-2.
*1955*

முருகா

# திருப்புகழமிர்தம்-ஜய ஆண்டு

## பொருளடக்க அட்டவணை

## "திருப்புகழமிர்தம்" சந்தா விவரம்

இந்தியா, சிலோன் .... ரூ. 2-0-0
வெளிநாடுகளுக்கு .... ரூ. 2-8-0

1. சந்தாதாரராகச் சேர விருப்பமுள்ளவர்கள் ஆண்டுக் கட்டணத்தை முன்னதாகவே செலுத்தவேண்டும். மணியார்டர் மூலம் சந்தாவைச் செலுத்துபவர்கள் மணியார்டர் கூப்பனில் விலாசத்தை விவரமாக எழுதியனுப்பவேண்டும்.

2. நமது பத்திரிகை ஒவ்வொரு சித்திரையினின்றே தொடங்கும். ஆதலால் நேயர்கள் எந்தத் திங்களில் சந்தாதாரராகச் சேர்ந்தாலும் அவ்வாண்டு சித்திரையினின்றே இதழ்கள் அனுப்பப்படும். ஒரு ஆண்டுக்குக் குறைந்த சந்தா கிடையாது.

3. நமது பத்திரிகை பிரதி இங்கிலீஷ் மாதம் 10-ந்தேதி தபாலில் சேர்க்கப்படும்.

4. இதழ் கிடைக்கப் பெறாத சந்தாநேயர்கள், அத் தமிழ் மாதம் 15உக்குள் எழுதிப் பெறவேண்டும். அதற்கு மேல் எழுதுவோர் 0-3-0 அனுப்பினால்தான் வேறு பிரதி அனுப்பப்படும். இதழ் கிடைக்கப் பெறாதவர்கள் தமது ஊர் தபாலதிகாரிகளுக்குந் தெரிவிக்கவேண்டும். பலமுறை சரிபார்த்து இதழ்கள் தபாலில் சேர்க்கப்படுவதால் காரியாலயத்தில் தவறு நேர இடமில்லை.

5. விலாசம் மாறுவோர், தமது மாறுதல் விலாசத்தை உரிய காலத்திற்குள் நமது காரியாலயத்திற்கும், போஸ்டாபீசுக்கும் தெரிவிக்கவேண்டும். இன்றேல் பழைய விலாசத்திற்கே அடுத்த இதழ் அனுப்பப்படும். அதற்கு யாம் பொறுப்பாளியல்ல.

6. மாதிரிப் பிரதி வேண்டுவோர் காலணா அனுப்பிப் பெறலாம். பதில் விரும்புவோர் ரிப்ளை கார்டு எழுதவும். கடிதம் எழுதும் சந்தா நேயர்கள் தங்கள் சந்தா நெம்பரைக் குறிப்பிடவும்.

மானேஜர்,
திருப்புகழமிர்தம் காரியாலயம்,
144, சாமிநாயகன் தெரு,
சிந்தாதிரிப்பேட்டை, :: சென்னை-2.

Page numbering incorrect.





ஓம் குஹாய நம:

# திருப்புகழமிர்தம்

"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் குள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"

மலர் 19 | ஜய ஆண்டு பங்குனித் திங்கள் மார்ச்-1955 | இதழ் 12

## திருப்புகழ்

### திருப்பரங்குன்றம்

பொருப்புறுங்கொங்கையர்பொருட்கவர்ந்தொன்றிய
பிணக்கிடுஞ் சண்டிகள் வஞ்சமாதர்-
புயற்குழன் றங்கமழ் அறற்குலந் தங்கவிர்
முருக்குவண் செந்துவர் தந்துபோகம்;

அருத்திடுஞ் சிங்கியர் தருக்கிடுஞ் செங்கயல்
அறச்சிவந் தங்கையில் அன்புமேவும்-
அவர்க்குழன் றங்கமும் அறத்தளர்ந் தென்பயன்
அருட்பதம் பங்கயம் அன்புறுதோ;

மிருத்தணும் பங்கயன் அலர்க்கணன் சங்கரர்
விதித்தெணுங் கும்பிடு கந்தவேளே-
மிகுத்திடும் வன்சம ணரைப்பெருந் திண்கழு
மிசைக்கிடுஞ் செந்தமிழ் அங்கவாயா;

பெருக்குதண் சண்பக வனத்திடங் கொங்கொடு
திறற் செழுஞ் சந்தகில் துன்றிநீடு-
தினைப்புனம் பைங்கொடி தனத்துடன் சென்றணை
திருப்பரங் குன்றுறை தம்பிரானே.

19-43

## பதவுரை

மிருத்து அண்ணும் பங்கயன் - இறப்பையுடைய பிரமதேவனும், அலர்க்கணன் - தாமரை மலர் போன்ற கண்களை யுடைய திருமாலும், சங்கரர் - உருத்திரனும், விதித்து எணும் கும்பிடும் - முறைப்படி என்றும் கும்பிடுகின்ற, கந்தவேளே - கந்தக் கடவுளே, மிருத்திடும் வன்சமணரை - மிருதியாக இருந்த வலிய சமணர்களை, பெரும் திண் கழுமிசைக்கு இடும் - பெரிதாகவும் வலியதாகவும் உள்ள கழுக்களின்மீது ஏறும்படிச் செய்த, செம் தமிழ் - செய்ய தமிழ்மறை பாடிய, அங்க வரயா - வேதாங்கங்கள் மணக்கும் திருவாயரே! பெருக்கு தண் - குளிர்ச்சியைப் பெருக்குகின்ற, சண்பக வனத்து இடம் - சண்பகமரங்கள் நிறைந்த காட்டில், கொங்கொடு-வாசனை நிறைந்து, திறல் செழும் சந்து - வலிமையும் செழுமையுமுடைய சந்தனமரங்களும், அகில் - அகில் மரங்களும், துன்றி நீடு - நெருங்கி நீண்டு வளர்ந்துள்ள, தினைப்புனம் - தினைப்புனத்தில் இருந்த, பைங்கொடி - பசுமை தங்கிய கொடிபோன்ற வள்ளியம்மையாரை, தனத்துடன் சென்று அணை - சேர்ந்து அவருடைய தனபாரங்களைத் தழுவி, திருப்பரங்குன்று உறை - திருப்பரங்குன்றத்தில் எழுந்தருளியுள்ள, பெருமாளே - பெருமையிற் சிறந்தவரே! பொருப்பு உறும் கொங்கையர் - மலைபோன்ற தனங்களை யுடையவர்கள்; பொருள் கவர்ந்து - தம்பால் வந்தவர்களுடைய பொருளைப் பறித்து, ஒன்றிய பிணக்கிடும் - (பொருள் நீங்கியவுடன்) தக்கபடி பிணங்குகின்ற, சண்டிகள் - கொடியவர்கள்; வஞ்ச மாதர் - வஞ்சனை செய்கின்றவர்கள்; புயல் குழன்ற அம் கமழ் - மேகம் போன்றதும் சுருண்டு அழகியதாய் வாசனை வீசுகின்றதும், அறல் குலம் தங்க அவிர் - கருமணல் கூட்டம் போல் கருத்து விளங்குவதுமாகிய கூந்தலையுடையவர்கள், முருக்கு - முருக்கு மலர் போலவும், வண் செம் துவர் - வளமையும் சிவப்பும் உடைய பவளம் போலவும் உள்ள இதழை, தந்து—இளைஞர்கள் அதரபானம் புரியத் தந்து, போகம் அருத்தி - போக இன்பத்தை ஊட்டும், சிங்கியர் - நஞ்சு போன்றவர்கள், தருக்கு இடும் - வாதம் புரிகின்ற, செம் கயல் - செம்மையான மீன் போன்ற கண்கள், அற சிவந்து- மிகவும் சிவந்து, அம் கையில் அன்பு மேவும் அவர்க்கு-அழகிய கரத்திலுள்ள பொருள் மீது அன்பு கொள்கின்றவர்களுமாகிய விலைமகளிரை நாடி, உழன்று - அவர்களிடம் அலைந்து திரிந்து, அங்கமும் அற தளர்ந்து - உடம்பும் (உணர்வும்) அறவே தளர்ச்சியுற்று, என் பயன் - அதனால் என்ன பயன்? (ஒன்று மில்லை); அருள் பதம் பங்கயம் - அருள்புரிகின்றதும் தாமரை மலர் போன்றதுமாகிய திருவடியிடம், அன்பு உருதோ? - அடியேனுக்கு அன்பு உண்டாகாதோ?

---



## பொழிப்புரை

இறப்புடைய பிரமதேவனும், நாராயணரும், உருத்திரரும் முறையுடன் என்றும் வணங்குகின்ற கந்தக்கடவுளே! மிருதியாக இருந்த வலிமை மிக்க சமணர்கள் பெரிய திண்ணிய கழுக்களில் ஏறுமாறு செந்தமிழ்ப் பாடல்களை ஓதிய வேதாங்கங்கள் மணக்கும் திருவாயரே! குளிர்ச்சி மிகுந்த சண்பகக் காட்டில் வாசனை மிகுந்த வலிமையும் செழுமையும் உடைய சந்தனமரம் அகில்மரம் முதலியவைகள் நெருங்கி நீண்டு விளங்குகின்ற தினைப்புனத்திலே பசுங்கொடி போல் இருந்த வள்ளியம்மையாரிடம் போய் அவரது தனங்களுடன் சேர்ந்து திருப்பரங்குன்றத்தில் எழுந்தருளியிருக்கும் பெருமிதமுடையவரே! மலை போன்ற தனங்களையுடையவர்கள்; தம்பால் வந்தவர்களுடைய பணங்களைப் பறித்து மீண்டும் அவர்களிடம் பிணங்கிடும் கொடியவர்கள்; வஞ்சனையுடைய மாதர்கள்; மேகம் போல் சுருண்டு மணம் வீசிக் கருமணல் போல் இருண்டுள்ள கூந்தலை யுடையவர்கள்; முருக்குமலர் போலும், சிவந்த பவளம் போலும் உள்ள இதழைத் தந்து போகத்தை யூட்டி மயக்கும் நஞ்சு போன்றவர்கள்; வாதிடுகின்ற சிவந்த மீன் போன்ற கண்கள் மிகவும் சிவந்து அழகிய கைப் பொருளின் மீது ஆசை வைக்கின்ற அப் பொது மகளிரை நாடி உழன்று உடம்பு மிகவுந் தளர்ந்து என்ன பயன்? தேவரீரது அருளை உதவும் திருவடித்தாமரை மீது அன்பு ஏற்படாதோ?

## விரிவுரை

**சிங்கியர்:—**

சிங்கி என்பது ஒருவகை நஞ்சு. அது குளிர்ந்து கொல்வது. விலை மகளிரும் குளிர்ச்சியாகப் பேசி உடைமையையும் உணர்வையும் உயிரையும் ஒருங்கே கவர்வர்.

**தருக்கிடுஞ் செங்கயல் அறச்சிவந்து:—**

தருக்கு—வாது. தம்பால் வந்தவரிடம் வாதிட்டு வேதனை புரியுங் கண்களை யுடையவர். அடிக்கடி ஆடவருடன் சிணுங்கியும் பிணங்கியும் கண்களைச் சிவக்கும்படிச் செய்வர்.

**அங்கையில் அன்பு மேவும்:—**

அங்கையில் என்றது கையிலுள்ள பொருளில் என்று பொருள் கொள்ளவும். கைப்பொருளின்மீதேயே கவனமுடையவராய் பற்பல சாகசம் புரிந்து மிச்சமின்றிப் பறித்துக் கொள்வர்.

**அங்கமும் அறத்தளர்ந்து என்பயன்?:—**

விலைமகளிரை நாடியும் தேடியும் ஓடியும் காலமெல்லாம் திரிந்து அதனால் உடம்பு உள்ளம் உணர்ச்சி ஆகிய யாவும்

தளர்ச்சியுறுவர். அதனுல் என்ன பயன்? பொருளும் போய் புகழும் போய் உடல் நலமும் குன்றி இடர்ப்படுவர். இம்மையிலே பழியும், மறுமையிலே பாவமும் எய்துவர். தளர்ச்சியடையு முன் இறைவன் திருவடியடைய முயலுதல் வேண்டும்.

**அருட்பதம் பங்கயம் அன்புறுதோ:—**

திருவருள் நிலையமாக விளங்குவது இறைவனுடைய திருவடி; திருவடியைத் தியானிப்பவர் திருவருட் செல்வத்திற்கு உரியவராவார்கள். அருட்செல்வம் பெற்ருர் முத்தி வீட்டில் முதன்மை பெறுவர். "அருளில்லார்க் கவ்வுலகமில்லை" என்பார் திருவள்ளுவர்.

அருளை அன்பாலேயே பெறமுடியும். நாம் இறைவனிடம் அன்பு வைத்தால் இறைவன் நம் மீது அருள் வைப்பன். அன்பில்லார் அருளைப் பெறுகிலார். நாளும் நாளும் இறைவன் திருவடித் தாமரை மீது அன்பை வளர்க்கவேண்டும்.

இறைவன் மீது தொடக்கத்தில் அன்பு வைத்தவர் பின்னர் எல்லா உயிர்களையும் இறைவனுடைய திருக்கோயில்களாகவே கருதி எல்லா உயிர்களிடத்திலும் அன்பு கொள்வர். எல்லாம் இறைவனுடைய உடைமைகளாகவே தோன்றும். ஈசனிடத்து அன்புடையார்க்கே இந்த பண்பாடு உண்டாகும். ஈசன்பால் அன்பிலாதார், யார்க்கும் அன்பிலாதவரேயாவர். அவர் என்புதோல் போர்த்த உடம்பாகமட்டுமே இருப்பர்.

அன்பின் வழிய துயிர்நிலை அஃதிலார்க்கு
என்புதோல் போர்த்த உடம்பு.

**மிருத்தணும் பங்கயன்:—**

மிருத்து—மரணம்; அண்ணும்—அடைதல். பங்கயன்—பிரமதேவன். அண்ணும் என்பது அணும் என வந்தது.

மால் அயன் முதலிய வானவர் அனைவர்க்கும் இறப்பு பிறப்புண்டு; திரிமூர்த்திகளும் பசுக்களே. அவர்கட்கு குணம், வடிவம், பேர் முதலியவையுண்டு.

மாலுந் துஞ்சுவான் மலரவ னிறப்பான்
மற்றைவானவர் முற்றிலு மழிவார்
ஏலும் நற்றுணை யார்நமக் கென்றே
எண்ணிநிற்றியோ ஏழைநீநெஞ்சே
கோலும் ஆயிரங் கோடியண்டங்கள்
குலைய நீக்கியும் ஆக்கியும் அளிக்கும்
நாலு மாமறைப் பரம்பொருள் நாமம்
நமச்சிவாயங்காண் நாம்பெறுந் துணையே. —திருஅருட்பா.



நூறுகோடி பிரமர்கள் நொங்கினர்
ஆறுகோடி நாராயணர் அங்ஙனே
ஏறுகங்கை மணலெண்ணில் இந்திரர்
ஈறில்லாதவன் ஈசன் ஒருவனே. —அப்பர்.

சிவபெருமான் ஒருவரே பிறப்பிறப்பில்லாதவர்; மூவருந் தேவரும் பசுக்களே; சிவமூர்த்தி **பசுபதி.** "பிறவா யாக்கைப் பெரியோன்" என்று இளங்கோவடிகளும், "பிறப்பிலியிறப்பிலி" என்று வில்லிபுத்தூராழ்வாரும் கூறுகின்றனர்.

பிறப்பிறப்பு என்னும் பெரும்பிணியை அகற்றக்கருதும் அன்பர்கள் பிறப்பிறப்பில்லாத இறைவனை வழிபட்டு உய்வு பெறுக.

**அலர்க்கணன்:—**

தாமரைக்கண்ணன்—திருமால்.

திருமால் நாடோறும் ஆயிரம் தாமரை மலர்களால் சிவமூர்த்தியை வழிபட்ட போது, ஒருநாள் ஒரு மலர் குறைந்தது கண்டு தனது கண்மலரை எடுத்து அருச்சித்தனர். அது காரணமாக அவருக்குப் "புண்டரீகாட்சன்" என்ற பேர் உண்டாயிற்று.

**சங்கரர்:—**

உருத்திரர். மூவரில் ஒருவர். உருத்திரர் வேறு; சிவம் வேறு; சிவம் சதுர்த்தப் பொருள். மூவருக்கும் அப்பாற்பட்ட நான்காவது பொருள். சிவபெருமானுடைய நாமங்கள் உருத்திரருக்கு உண்டு. அதனுல் உருத்திரரைச் சங்கரர் எனக் கூறினர் என்று அறிக.

**விதித்தேனும் கும்பிடும்:—**

விதி—முறை. என்றும் என்ற சொல் எனும் என மருவியது. மும்மூர்த்திகளும் முழுமுதற் கடவுளாகிய முருகவேளை அன்புடன் வணங்குகின்றனர்.

"இதழ்பொதி யவிழ்ந்த தாமரையின்
மணவறை புகுந்த நான்முகனும்
எறிதிரை யலம்பு பாலுததி நஞ்சராமேல்
இருவிழி துயின்ற நாரணனும்
உமைமருவு சந்த்ர சேகரனும்
இமையவர் வணங்கு வாசவனும் நின்றுதாழும்
முதல்வ" —திருப்புகழ்.

**அங்கவாயா:—**

அங்கம்—வேத அங்கங்கள் ஆறு: இதனைச் சடங்கம் என்பர்.

"வேதமோ டாறங்கமாயினை" —தேவாரம்.

நாசி வாய் கண் காது கை கால் என்ற ஆறு அங்கங் களைப்போல் வேதத்திற்கும் ஆறு அங்கங்கள் உண்டு. அவை வருமாறு:

சிட்சை, வியாகரணம், சோதிடம், நிருக்தம், கல்பம், சந்தஸ்.

**சிட்சை:—**

நாசி போன்றது. மூச்சுக் காற்று மனித வாழ்க்கைக்கு முக்கியமானது. அது நாசியின் மூலம் இயங்குகின்றது. அது போன்றது சிட்சை என்ற அங்கம்.

எழுத்துக்களின் உச்சாரணம், மாத்திரை, உற்பத்தி முதலியவைகளை வரையறுப்பது.

**வியாகரணம்:—**

வாய் போன்றது. நடராஜப் பெருமானுடைய நடனத்தின் முடிவில் உடுக்கையிலிருந்து, பதினன்கு ஒலிகளுடன் பதினன்கு எழுத்துக்கள் தோன்றின. பாணினி இவற்றை பதினன்கு சூத்திரங்களாக எழுதினர். இது மாஹேஸ்வர சூத்திரம் எனப்படும்.

பாணினியின் வியாகரணத்திற்குப் பாஷ்யஞ் செய்தவர் பதஞ்சலி. ஆதிசேடனுடைய அம்சம் பதஞ்சலி. ஆதிசேடன் நடராஜாவுடைய திருவடியிலுள்ள அணிகலம்.

சிவபெருமானுடைய மூச்சுக் காற்று—வேதம்.
" கைக்காற்று—வியாகரணம்.
" கால் காற்று—பாஷ்யம்.

**சோதிடம்:—**

கண்போன்றது. கண் தொலைவிலுள்ளதைக் காட்டும். ஜோதிடமும் பல ஆண்டுகளுக்கு அப்பால் வரக்கூடிய சூரியக் கிரகணம், சந்திரக்கிரகணம் முதலியவற்றைக் காட்டுவது.

**நிருக்தம்:—**

காது போன்றது. இது நிகண்டு. ஏன் இந்தப்பதம் இங்கு வந்தது? என விளக்குவது. ஹ்ருதயம்:— ஹ்ருதி அயம். ஹ்ருதயத்தில் இவன் இருக்கின்றன். என்பது



பொருள். பரமாத்மா நிவாசம் புரிக்கின்ருர். இதுபோல் பதங் களை நிச்சயிப்பது.

**கல்பம்:—**

கைபோன்றது. காரியங்களைச் செய்வதனுல் கரமெனப் பட்டது. தெலுங்கிலே செய் என்று கையைக் கூறுவர்.

இன்னர் இதனைச் செய்யவேண்டும்; இன்ன கர்மாவுக்கு இன்ன மந்திரம்; இன்ன திரவியம்; செய்விப்பவர்களுடைய இலக்கணம்; பாத்திரங்களின் அமைப்பு; இவைகளை விளக்கு வது.

**சந்தஸ்:—**

கால் போன்றது. யாப்பு போன்றது. இன்ன இன்ன கவிக்கு இத்தனை இத்தனை எழுத்துக்கள்; இத்தனை அடி; இத்தனை மாத்திரை என்று வரையறுப்பது.

வேதமந்திரங்கள்:— சந்தஸ்
மற்றவை:— சுலோகம்.

இவையில்லாமல் நிற்கமுடியாது; ஆதலின் கால் எனக் கொள் ளப்பட்டது.

இந்த ஆறங்கங்களிலும் வல்லவர்கள் வேதத்தின் பொருளை நன்கறிந்தவர்கள். வேதத்தினை யறிந்தவர் வேத முதல்வராகிய இறைவனையறிவர். வேதம் அங்கம் இவைகள் இறைவனுடைய திருவாக்கில் தங்கியுள்ளன. ஆதலினுல் "அங்கவாயா" என்றனர்.

### கருத்துரை

**மூவர் முதல்வரே! குறமகள் கணவரே! பராசல மேவிய பரம்பொருளே! மாதர் மயக்கற்று உமது பாதமலர் மீது அன்பு வைக்க அருள் புரிவீர்.**

உ
முருகா

# பாம்பன் ஸ்ரீமத்-குமரகுருதாச சுவாமிகள் வரலாறு

(உஅஎ-ம் பக்கத் தொடர்ச்சி)

## திருவல்லிக்கேணி கடற்கரையில் அறிவுரை யருளல்

குமாரபுரம் என்னும் புதுப்பாக்கத்தில் பல ஆண்டுகள் அடிகளார் வதிந்தனர். நாடோறும் மாலை நேரத்தில் திருவல்லிக்கேணிக் கடற்கரை யடைந்து தனியே மணற்பரப்பில் அமர்ந்து மனமடங்கி நிற்ப மவுன நிலை யடைந்து இருப்பர். இரவு 10 நாழிகைக்கு மேல் இருப்பிடம் எய்தி பால் பழம் உண்பர். சில நாள்களில் பால் பழம் உண்ட பின் மீண்டும் கடற்கரை சென்று தியானத்திலிருப்பர். வேனிற்காலத்தில் இரவு முழுவதும் கடற்கரையிலேயே இருந்துவிடுவர். சந்திர ஒளியையும் நீலக் கடலையும் கோல வானத்தையும் கண்டு மகிழ்ந்து வெண்மணலில் வீற்றிருப்பர். சில சமயம் கடற்கரை வழியாகவே சென்னைவரை நடந்து மீளுவர்.

ஒருநாள் முழுமதி; கீழ்த்திசையில் ஒளி செய்துகொண்டிருந்தது. மேல்திசையில் மெல்லிய மழைமுகில் இருந்தது. அதனை அடிகளார் நோக்கினர். கதிரவனுக்கு எதிரே காணப்படும் வானவில்லைப்போலவே அம்மழை மேகத்திடை இரண்டுவில் பச்சை முதலிய நிறங்களுடன் விளங்குவதைக் கண்டு அதிசயித்தனர்.

"இரவில் வானவில் காண்போன் விரைவில் மரணமுறுவான் என்னுங் கொள்கை சரியன்று; ஆறு, ஏழு ஆண்டுகட்கு முன் நான் இரவில் வானவில்லைக் கண்டேன். அதனால் மரணம் எனக்கு எய்தாமையால் என அறிக" என்று தமது சீடர்கட்கு அறிவுறுத்தியருளினர்.

இரவு நேரத்தில் கடற்கரை வந்து சந்தித்த மாணவர்கட்கு நீதிநெறிகளையும், அன்பின் தகைமையையும், வெற்றிவேல் விமலனுடைய அருள் விளக்கத்தையும் இனிது எடுத்து உபதேசித்தருளுவார்.

சித்திரை மாதம் பௌர்ணமியன்று கடற்கரையில் செவ்வேட் பரமனுக்குச் சிற்றுண்டி படைத்து வழிபட்டு அன்பர்கட்கு வழங்கித் தாம் உண்பார். அவ்வாறு உண்டபின் அந்நிலா வெளியில் நெடுவேலண்ணலின் முழுமுதற் பெருமையை நெடுநேரம் கூறி உள்ளங் குளிர்வர். பார்த்தசாரதிச் செட்டியார், சிவசங்கரத் தம்பிரான், பு. சம்பந்தமுதலியார், குழந்தைவேல் முதலியார் என்பவர்கள் இதில் முக்கிய பங்கு பெறுவார்



கள். இவ்வாறு அடிகளார் அந்த இருட்கடலுக்கு அருகே அருட்கடலாக விளங்குவாராயினர்.

## ஆங்கில மருத்துவர்க்கு அறிவுரையருளல்

ஆங்கிலம் பயின்று B. A. பட்டம் பெற்றுச் சென்னை மருத்துவச்சாலையில் உடலமைப்பு முதலியவைகளைப் பயின்று கொண்டிருந்த ஒருவர் கடற்கரையில் ஒரு மரத்தின் மீது சாய்ந்துகொண்டிருந்தார். அவர் அடிகளாரை நோக்கி "இரத்தமே அறிவுடையான்மா; கையிலுள்ள இரத்தத்தை மேலேறச் செய்யின் அதிலுள்ள உணர்ச்சியிராது; இதை அறியாத பழங்காலத்து முனிவர்கள் முதலியோர் மூடத்தனமாக ஆன்மா வேறு ஒன்றுளது என்று எழுதி வைத்துவிட்டார்கள். அதனை நீங்கள் படித்து நம்பிக்கை கொண்டு மயங்குகின்றீர்கள்" என்று கூறினர்.

அடிகளார் அவரை நோக்கிக் கூறுவார்:- உதிரம் அறிவுடையான்மாவாயின் அதிகம் உதிர முள்ளவனுக்கு அதிக அறிவு இருக்க வேண்டுமல்லவா? இப்போது உமது மெல்லிய உடம்பில் உதிரம் குறைவாகவே காணப்படுகின்றதே. அதனால் நீர் அறிவு குறைந்தவரா? குளோர பாரத்தால் உணர்ச்சியிழந்த ஒருவனுடைய கை கால்களை நறுக்கும்பொழுது உதிரம் மளமள வென்று பெருகி வருகின்றதே. அது உயிராய் உணர்வாய் இருப்பின் அவன் எங்ஙனம் உணர்ச்சியிழந்து கிடப்பவனுவான்? அறியாதார் எழுதிய நூல்களைப் படித்து நீர் மயங்கிவிட்டீர். உதிரம் ஆன்மாவன்று. உதிரத்தைப் பிராணவாயுவும், பிராணவாயுவை ஆன்மவுணர்வும் பற்றி நிற்கின்றன; அவ்வுணர்வையும் வாயுவையும் அடங்கச் செய்திருத்தலே குளோர பாரத்தின் செயலாகும். மிகவும் நுணுக்கமாக உள்ளது ஆன்மா. என்று இனிது எடுத்து அவருக்கு உணர்த்தியருளினர். அவர் அது கேட்டு வாயடங்கி நின்றனர்.

## மஹாதேஜோமண்டலத்தார்

மஹாதேஜோமண்டலவடிவ குமாரக்கடவுள் ஒருவனையே வழிபடுவோர் எத்தேயத்தராய் எக்குலத்தராய் இருப்பினும் அவர்கள் அனைவரும் "மஹாதேஜோமண்டலத்தார்" என்னும் சபையினராவார் என்று அடிகளார் உறுதி செய்து உரைத்து மஹாதேஜோமண்டல சபையை நிறுவியருளினர்.

> "அளவிலாத் தேஜோமண்டல இறைவன் ஒருவனையே ஆசாரத்தோடும் அன்போடும் வழிபடூஉம் அடியாரனைவரும் எத்தேசத்தாராய் எக் குலத்தாராயிருப்பினும் அவர் மஹா தேஜோ மண்டலத்தார் ஆவார். ஆகலின் யாம் அவரை இப் பெயர் தரித்து நிற்கும் கடன்மைக்குட்படுத்தியுள்ளோம்"

எனத் திருப்பா என்ற நூலில் திட்பம் என்ற வுரையில் (கடவுள் வணக்கம் மூன்று பாடலின் உரை) கூறியுள்ளனர்.

அவனருள் ஒன்றே வேட்டெவ் வரத்தைவந் துறினு நிற்போர்
எவனுறு பதியிற் றேன்றி எங்கிருந் திடினுஞ் சாதி
எவனென வினவு வார்முன் யாதுரைத் திடினும் அன்னோர்
கவனமில் மாதே ஜோமண் டலத்தராய்க் களிப்பார் மன்னே.

எனச் செக்கர்வேள் செம்மாப்பிலும் கூறியுள்ளார்.

## அடிகளாரது சித்தாந்தம்

செக்கர்வேள் செம்மாப்பு, செக்கர்வேளிறுமாப்பு என்ற செய்யுள்நூல்கள் அடிகளார் அருளிச்செய்தவையாம்.

## எழுவாயுரையில்

"இதனுள் முழுமுதலிலக்கண அதிகாரமும், செக்கர்வேளிறுமாப்பினுள் வீடுபேற்றதிகாரமும் எமது முடிவான சித்தாந்தமாகும். ஆயிரத்து நூற்று ஒன்று திருப்பாட்டுக்களால் நிரம்பியுள்ள தீருப்பா என்னும் எமது நூலினுள் நாற்பத்து மூன்று திருப்பாட்டுக்களுக்கு மேற்கோள்களோடு வேதத் தமிழால் உரையாக வரையப்பட்ட திட்பத்திலே இத்தீர்வையே எமது முடிவான சித்தாந்தம் எனவும் தீட்டப்பட்டமையின் அந்நூலுட் பரந்துகிடக்கும் பொருளும் சுருங்கி நிற்கும் பொருளும் இச் சித்தாந்தமேயாம். இன்னும் எம்முடைய பத்திய கத்திய ரூபமாயுள்ள பன்னூல்களின் முடிபும் இதன்கண்ணேயே யடங்கும்"

என்று ஆசிரியரே கூறியிருத்தலின் இந்நூல்களின் நுட்ப திட்ப நிபுணத்துவம் உணர்வார் உணர்ந்து கொள்க.

## கால் முறிந்திடுதலும் வேல் துணை புரிதலும்.

அடிகளார் குமாரசுவாமியம் என்னும் காவியத்தை ஐந்து கண்டங்களாக வகுத்து, கலியுகம் 5023 க்குச் சரியான சாலிவாகன சகாத்தம் 1844. துர்மதி-ஆடிமாதம் (கி. பி. 1921) பாடத் தொடங்கினா.

கி. பி. 1923 டிசம்பர் 27-ம் நாள் பகல் சென்னை தம்பு செட்டித் தெரு வழியே அடிகளார், செல்லும்போது தற்செயலாக ஒரு குதிரை வண்டியின் சக்கரம் அடிகளாரது இடக்கணைக்காலின்மீது ஏறக் கால் முறிந்துவிட்டது.

உடனே அங்குள்ள சில நல்லவர்களால் அரசாங்கத்துப் பெரிய மருத்துவச் சாலையில் சேர்க்கப்பட்டனர். சிகிச்சையும் நிகழ்ந்தது. இப் பேராபத்தைச் செவிமடுத்த திருவல்லிக்கேணி சோதிடர் சின்னசாமியவர்களும், அவர் வாழ்க்கைத் துணைவியார் பார்ப்பாத்தியம்மையும் விரைந்து வந்து அடிகளாரைக் கண்டு கண்ணீர் ஆறுய்ப் பெருகக் கதறியழுதார்கள். அடுத்து சிவசங்கரத் தம்பிரான் ஓடிவந்து அல்லல்பட்டு அழுதனர்.



பின்னர் பலர் வந்து பார்த்து பரிவுற்று வருந்தி யழுதனர். மருத்துவச்சாலையில் அன்பர்கள் கூட்டம் அதிகரித்தது.

சின்னசுவாமி சோதிடர் தமது இல்லத்திலிருந்து சண்முக கவசத்தைப்பரிவுடன் பாராயணம் புரிந்து வந்தனர். புரியும் போது முரிந்தகால் எதிரில் தோன்றியது. பாராயணம் புரியும் போதெல்லாம் அம் முரிந்த கால் தோன்றுவதாயிற்று. அவர் அதனைக் கண்டு வணங்கி வேலவனை வேண்டிப் பாராயணம் புரிந்து வந்தார். ஒருநாள் அவருக்கு இரு வேல்கள் காலில் பொருந்த நிற்பதையும் ஒரு வேல் முனை தாங்கி நிற்பதையுங் கண்டு களிப்புற்று இதனை அன்பர்கட்கு உரைத்தனர்.

அடிகளார் பற்பல ஆண்டுகளாக உப்பு புளி மிளகாய் சர்க்கரை கடுகு நல்லெண்ணெய் முதலியவைகளை யொழித்து ஒருவேளையே சிறுஅளவு உணவுஉண்டுவந்ததாலும், முதுமைப் பருவமாதலாலும் கால் கூடாது என்று முதன் மருத்துவராகிய ஆங்கிலேயர் கருதி "நான் செய்வேன்; இக்கால் குணப்படாது" என்று கூறினர். அன்பர்கள் அதுகேட்டு அளவற்ற அல்லல்பட்டு அகமிக நொந்து வருந்தினர்கள்.

## மயூரவாகன சேவனம்

பதினோராவது நாள் இரவு அடிகளார் படுக்கையில் படுத்த வண்ணம் "முருகா! மூவர் முதல்வா! இதுவும் உன் சோதனையோ? பண்டைவினையின் வாதனையோ? வருவதெல்லாம் வருக. கருணைக்கடலே! முதுமைப் பருவத்தில் இம்மருத்துவச் சாலையில் கிடந்து வருந்துகின்றேனே. பரம கருணாநிதியே! உன் திருவருட் செயல் எவ்வண்ணமோ? அதனை அறியலாகுமோ?" என்று மிகுந்த உணர்ச்சியுடனும் உருக்கமுடனும் இளங் குமரனை ஏத்தினர். நள்ளிரவு; அப்போது முருகவேளுடைய வாகனமாகிய மயில்கள் வானத்தின் மிசை மேல் திசையிலிருந்து நடனம் புரிந்துகொண்டு வர அடிகளார் கண் குளிரக் கண்டு கைகூப்பி வணங்கினர்.

ஒரு மயில் தன் கலாபத்தை விரித்து மண்டலாகாரமாக ஆகாயமுழுவதும் மறைத்து மிகப் பெரிய வடிவுடன் நடித்தது. மற்றொன்று சிறிய வடிவுடன் இடப்புறத்தே நின்று நடித்தது. இந்த அரிதினும் அரிய மயூரவாகன சேவனக்காட்சியைக் கண்டு அடிகளார் அதிசயமுற்றனர்.

மறுநாள் இரவு அடிகளார் படுத்திருக்கும் படுக்கையில் ஒரு செவ்விய குழந்தை படுத்திருக்கக் கண்டு, "முருகா" என்றவுடன் அது மறைந்துவிட்டது. உடனே ஆசிரியர் அவரது திருநாமத்தைப் பன்னிருமுறை உச்சரித்து வணங்கினர். உடனே கால் கூடிவிட்டது. கால் கூடாது என்று உறுதி கொண்ட ஆங்கிலேயராகிய பெரிய மருத்துவர் இது தெய்வச் செயல் என்று கருதி அடிகளாரை வணங்கினர். "பதினைந்து

நாட்களில் இரணம் ஆறிவிடும்; அதுவரை இந்த மருத்துவச் சாலையை விட்டு யாண்டும் போகவேண்டாம்'' என்ற ஒரு அசரீரி வாக்கு உண்டாயிற்று.

வேல் முருகன் கருணையால் கால் குணமடைந்தபின் மருத்துவச்சாலையை விட்டுப் புறப்பட்டு ஒரு வண்டியில் ஏறி புதுப்பாக்கத்தில் புதுக்கப்பட்டிருந்த பொ. குழந்தைவேல் முதலியாருடைய வீட்டில் அடிகளார் தங்கியிருந்தார். புதுப்பாக்கவாசிகளாகிய க. வேலாயுத முதலியார், மாசிலாமணி முதலியார், தாமோதர முதலியார் என்பவர்கள் தவமுனிவர் மீது வைத்திருந்த தனியன்பின் பெருக்கினால் இரவு பகலாக உடனிருந்து பணி பல புரிந்தார்கள். குழந்தைவேல் முதலியாருடைய மனைவியார் புஷ்பவதியம்மாளும், இராமநாத முதலியாருடைய தாயார் ஜீவரத்தினம்மாள் தனது முதுமையையும் நோக்காமலும் உணவு அமைத்து உதவிவந்தார்கள்.

ஞானசாகர முதலியார் முதலியோர்களும் அடிக்கடி வந்து அடிகளாரை உபசரித்தார்கள். முன்னே அடிகளாரிடம் அன்பாயிருந்தாருட் சிலர் அடிகளார்க்கு இந்த பெரிய ஆபத்து எய்தியபோது பரிந்துவந்து பார்த்தார்களில்லை. "பரிவிலார் செய்கை இங்ஙனம் ஒன்றுமில்லையாம்; அவர் பகவான் பரிவைக் காண்பது யாங்ஙனமேயோ? உள்ளும் புறனுமிருந்து அவனறிகின்றனனே?'' என்று அடிகளார் கூறினர்.

இரண்டு திங்களுக்கு மேல் வெய்யிலின் வெப்பம் மிகுதியாக இருந்ததனால் சென்னை நம்புலையர் தெருவில் வாழும் P. ஜகநாத முதலியார் வந்து அடிகளாரை அழைத்துக் கொண்டுபோய்த் தமது வீட்டின் மேல் மாடியில் இருத்தி அவரும் அவர் மனைவியார் பாலம்மாளும் நன்கு உபசரித்தனர். சில நாளாயின பின் அடிகளார் நன்கு நடைகொள்வாராயினர். இவ்வாறு அடிகளாருக்கு எய்திய பெரிய இடர் எம்பெருமான் திருவருளால் விலகிய திருவருட் செயலை, அருந்தவ முனிவர் தாம் அப்போது பாடிக்கொண்டிருந்த காவியமாகிய குமார சுவாமியம் என்ற நூலில் அசோக சாலவாசம் என்ற பகுதியில் அழகாகக் கூறியுள்ளனர். அதனை அன்பர்கள் படித்து அறிக.

பழைய வண்ணாரப்பேட்டை திரு. ஷண்முகானந்த அடிகளாரும் நமது அடிகளாரை அடிக்கடி வந்து பார்த்துச் சென்றனர்.

## ஸ்ரீமத்--குமாரசுவாமியம்

பின்னர் பெருந்தவ முனிவர்பெருமான் குமாரசுவாமியம் என்ற அந் நூலைப் பாடி முடித்தருளினர். அது ஐந்துகண்டங்களும் 1192 செய்யுள்களும் உடையது.



இதன் முன்னுரையில்:—

"நுவலும் பொருளாலும், நுவன்றோன் பெருமையாலுஞ் சாலச் சிறப்புடையது. எவ்வாறு எனில்? நூலின் பொருளாவான் குமாரக் கடவுள்; நுவன்றோன் அக் குமாரக்கடவுளின் மெய்யடிமைத் திறத்தில் இஞ்ஞான்று தலைசிறந்து விளங்கும் ஒரு தவசி!'' என்று எழுதியிருப்பதை யறிக. ஏற்புடைய புதிய புதிய வர்ணனைகளும், எதிர்கால நிகழ்ச்சிதானே யொலிக்குமாறு கூறும் இரட்டுற மொழிதலும், வேறுபட விளம்பும் இரட்டுறமொழிதலும், சந்தர்ப்பத்திற் கேற்ற சந்தமும், சந்த வேறுபாடுகளுள் பல புதியன தரு மதுகையும், எழுத்தளவுகள் பொருந்த நடக்கும் நிரல்களும், இறைவன் இலக்கணத்தோடு மாறுபடாத பரிசுத்த பரமசரிதைகளும் தன்னகத்தே கொண்டு திகழும் புகழுடைய நூல் இக் குமாரசுவாமியம் என உணர்க.

இவ்வரிய நூலின் பெருமை யுணர்ந்த வொருவர் தமிழ்ப் பயிற்சியுடைய ஒரு அன்பரை நோக்கி இந்நூலின் திறத்தை எடுத்து இயம்பினர். அவர் "வகையுளி'' செய்து ஒரு நூல் முழுவதும் பாடப்பட்டுளது என்பதை நீர் அறிந்திருக்கின்றீரோ?'' என்று வினவினர். இதற்கு இவர் ஒன்றும் விடை கூற அறியாது சுவாமிகள்பால் எய்தி "வகையுளி என்பது யாது? அவ்வகையுளி செய்து பாடுவது அருமையா? தங்கள் பாடல்களுள் அவ்வாறு பாடியது எது?'' என்று வினவினர்.

அடிகளார் கூறுவார்:–

"வகையுளியைப் பற்றியறிய விரும்பும் அன்பினீர்! அவ்வுளி—பூட்டுவில் மொழிமாற்று முதலிய பொருள் கோள்கள், சிலேடைகள், இரட்டுற மொழிதல், இருகாலப் பொருள் தரும் இரட்டுற மொழிதல், வழியெதுகை, தலையாகெதுகை, நிரோட்டகம், நிரோட்டகப் பிறிது படுபாட்டு, ஏக பாதம், மாலைமாற்று, மாலைமாற்றுப் பிறிது படுபாட்டு, பாடகமடக்கு, அந்தாதி மடக்கு, ஒரெழுத்து விகற்பமடக்கு முதலிய மடக்குகள், கொம்பில்லது, ஒற்றில்லது, வல்லினத்தது, மெல்லினத்தது, இடையினத்தது, நெட்டெழுத்தால் நிகழ்வது, குற்றெழுத்தால் நிகழ்வது, வெண்டளைகொண்டு நிகழ்வது, சீர்முழுவதும் நெடிலோடு ஒற்றணைதல், குறிலோடு ஒற்றணைதல், சதாக்கரம், ஒற்றிலாச் சதாக்கரம், அட்டோத்தர சதாக்கரம், ஒவ்வோரடியும் எழுத்தளவுடைமை, முதலயல் இரண்டு சீர் குழிப்பு வண்ணம், பல் சந்தவகுப்பு, திரிபங்கி, பிறிதுபடுபாட்டு, பகுபடுபாட்டு, பாட்டுடைத்தலைவன் பெயரை விடாது கொண்ட நூற்றிருபத்தைந்து பங்கி முதலிய பல்வகைப் பங்கிகள், அவற்றுள் பாநான்கும் இனமும் உறுநிரலில் அனைத்தும் குழிப்புவண்ணமாங் கலிப்பிரமம், உவமானப்பிரமம், கட்டளைக் கலித்துறையைப் பல்வகைச் செய்

யுளாய் அந்தாதித்து ஒருநூலாக்கல், அதன் கண் முடுகு செய்தல், ஓரெதுகைப்பத்து, எதுகை மோனையுடைப் பண்டைச் சுழிகுளம், ஒற்றிலாச்சுழிகுளம், எதுகை மோனை பிழையாக் குழிப்பு வண்ணச் சருப்பதோபத்திரம், தமருக பந்தம், இரதபந்தம், சதுரங்கபந்தம், சஸ்திரபந்தம், சதாக்கர மயூரபந்தம், அந்தாதித்தொடைக் கமலபந்தம், இக் கமலபந்தத்துள் மோனை நயமுடைய பிறிது படுபாட்டு முதலிய பல்வகைச் சித்திர விசித்திரமாய்ப் பத்திற்கு மேற்படு கவிகள், எதுகை மோனை பிழையா நாகபந்தத்துள்ளே நெட்டெழுத்துச் செய்யுளாய் மாலைமாற்றாய் வருபங்கிகள், ஆறறை, மாத்திரைவருத்தனம், அக்கரவருத்தனம், மாத்திரைச் சுருக்கம், அக்கரச் சுருக்கம், பஃறிற வினவுத்தரம், கூடசதுக்கம், காதைகரப்பு, நடுவெழுத்தலங்காரம், ஓரோசையில் ஆறெழுத் தெடுத்துக்கொண்டு பல்வகையலங்காரங்களாற்றிக் காட்டல், வடசொற் புகாது நூலியற்றல், கோமூத்திரி, நான்காரைச் சக்கரம், அந்தாதித்தொடை நான்காரைச் சக்கரம், முதலியனவாக வருத்தப்பட்டுச் செய்யுஞ் செய்யுள்கள் போன்றதா? இக் கவித்திறங்களெல்லாம் என்னூல்களுள் என்னூலிலக்கப்பட்டனவே; செம்மையற்ற தொடையே செந்தொடையென மங்கல வழக்கில் வைத்து உரைத்ததையறியாது செம்மையுற்ற தொடையே செந்தொடை யெனப்பட்டதாகலின் இத் தொடைச் செய்யுள் செம்மைத்தெனக் கொள்வர்போல் வாரும் இருப்பரே. அவர் செய்கை, பொரிமாவைக் கண்டு பொக்கை வாய்ச்சி மெச்சிக் கோடலையொக்கு மென்றுங் கூறல் சால்பிற்றுகாதோ? வகையுளி யாதுகொல்? "அவ்வச் சொல் முடிவே சீர் முடிவாக்கித் தனைகொள்ளாமல் வேண்டிய இடத்துச் சீர்முடிவு செய்து தனைகோடல்" என்பதஃதாயின், இதனில் யாது அதிசயம்? இந்நடை எவர் செய்யுளிற் போதரவில்லை? இயலாதென அஞ்சற்க; எளிதாகவே வகையுளி செய்து கொள்ளலாமே, என்பதுணர்த்தவன்றே அது போந்ததாகும். சைவ நூல்களுள் ஒரு காவியம் முழுவதும் அஃதாயின் அதன் பெற்றி யாதாம்! இவ்வுளியை, எந்த யாப்பிலக்கணம் வியந்து கூறவுளது? உளதேல் அவ்விலக்கண மருங்கில் இலக்கியத்தோடு அது காட்டலாமே. வகையுளி செய்துகொள்வார் ஆசு மதுரம் சித்திரம் வித்தாரம் என்பன கூறு நாற்கவி ராஜருமாவரே?'

எனத் தெரித்துக் காட்டினர். ஆதலின் அடிகளாருடைய ஆழ்ந்தகன்றோங்கும் அறிவும் நூலாராய்ச்சித்திறமும் திட்பமும் புலமை நுட்பமும் அளவிட முடியாதவை எனவுணர்க.

(தொடரும்.)



# கற்பு

## குழந்தை குமாரி

குழந்தையில்லையே யென்று ஆஸ்தானப் புலவராகிய சிதம்பர நாவலருக்குப் பெரிய வருத்தம். மக்களில்லாத வாழ்வு அவருக்குப் பாலைவனம் போல தோன்றியது. கண்டதே கண்டும் கேட்டதே கேட்டும் உண்டதே உண்டும் உரைத்ததே உரைத்தும் வாழ்வு அலுத்துவிட்டது. குழந்தையின் திரு முகத்தைக் காணக் கண்கள் துடித்தன; குழந்தையின் மழலைச் சொற்களைக் கேட்கச் செவிகள் விரும்பின. மக்களைத் தீண்டாத மெய் மெய்யாகவே வேதனையுற்றது.

கல்லா மழலைக் கனியூறல் கலந்து கொஞ்சும்
சொல்லா லுருக்கி யழுதோடித் தொடர்ந்து பற்றி
மல்லார் புயத்தில் விளையாடு மகிழ்ச்சி மைந்தர்
இல்லா தவர்க்கு மனைவாழ்வின் மாண்பு என்னும்.

என்ற பாடலை அடிக்கடிக் கூறி வருந்துவார்.

கார்த்திகை தோறும் திருச்செந்தூர் சென்று முருகவேளை முழுமனதுடன் வழிபடுவார். சஷ்டி விரதம் அநுஷ்டித்து வருவார். தன்னால் முடிந்த தான தருமங்களைச் செய்து வந்தார். நாள்தோறும் தங்கள் ஊரிலே உள்ள குமாரக்கடவுளுடைய கோயிலுக்குப் போய் நெய் விளக்கு ஏற்றி நியதியாக வழிபாடு செய்து வந்தார்.

பகல் நேரத்தில் அரசனுடைய அவைக்களம் போய் செந்தமிழ்ப் பாடல்களைக் கூறி மன்னவனை மகிழ்விப்பார். அவருடைய அருந்தமிழ்ப் பாடல்களைச் செவிமடுத்த சிங்கம்பட்டி மன்னவன் மட்டற்ற மகிழ்ச்சியுற்று உயர்ந்த பரிசுகளை உவந்து அளிப்பான்.

இவ்வாறு எல்லாச் சிறப்பும் பொருந்திய புலவர் பெருமானுக்குப் புதல்வர் இல்லாத குறைமட்டும் சதா வருத்திக் கொண்டே இருந்தது. ஒரு நாள் ஒரு சிறந்த மாதவ முனிவர் புலவருடைய இல்லத்திற்கு எழுந்தருளினர். பாவலரும் அவருடைய பத்தினியாரும் பரம ஞானியை வரவேற்று அமிழ்தினும் இனிய அறுசுவை உண்டி படைத்து உபசரித்தனர். பற்றற்ற ஞானி அவர்களுடைய அன்பைக்கண்டு அளவற்ற மகிழ்ச்சியுற்று திருநீறு வழங்கி "உங்கள் குறை தீரும்" என்று ஆசி கூறி அகன்றனர். அந்த மாதவ மணியின் மகத்தான ஆசீர்வாதப் பயனால் புலவர் மனைவியார் கருவுற்று உரிய காலத்தில் அரியதொரு பெண்மகவைப் பெற்றெடுத்தாள். அக்குழந்தை தங்க விக்கிரகம் போல தனிப் பெருங் கவினுடன் திகழ்ந்தது. சந்திரனைக் கண்டு குமுதம் மலர்வது போல்

குழந்தையைக் கண்டு புலவருடைய அகமும் முகமும் மலர்ந் தன. தனக்கு ஆசி கூறிய அருந்தவ முனிவரைக் கை கூப்பித் தொழுது போற்றினர். குழந்தைக்குக் "குமாரி" என்று பெயரிட்டனர்.

குமாரி நாளும் நாளும் செல்வமாக வளர்ந்துவந்தாள். அறிவு நிரம்பிய புலவர் பெருமானுடைய புதல்வி யாதலின் அவளுடைய முகமண்டலத்தில் அறிவு ஒளி வீசியது. மூன்று வயதிலேயே மிகவும் இனிமையாகவும் பொருள் நயம் பொருந்தியதாகவும் பேசுவாள். கற்பூர மலையில் தீப்பிடிப்பது போல் அவளுக்குக் கல்வி அறிவு எளிதாக நிரம்பியது. தந்தை யாரிடம் நீதி நூல்களையும் இலக்கண இலக்கிய நூல்களையும் பயின்றுவந்தாள். தேவார திருவாசகங்களைத் தனிமையில் இருந்து இனிமையாகப் பாடி இறை வணக்கம் செய்வாள்.

குழந்தை குமாரியுடன் புலவர் சில சமயம் அரசவைக்குச் செல்வார். குமாரியினுடைய பாடல்களைக் கேட்டு வேந்தன் வியப்பு அடைவான்.

சிங்கம்பட்டியில் உள்ள திருமால் கோயிலில் நிகழ்ந்த திரு விழாவின் போது தொடர்ச்சியாக புலவர் பாகவதத்தைக் கூறிப் பல்லாயிர மக்களைப் பரவசப்படுத்தினர். பார்த்திபனும் நாள்தோறும் கேட்டு இன்புற்றான். பதினாயிரம் பொன் சன்மான மாகப் புலவர் பெருமானுக்கு வழங்கினன். உணர்ச்சி வெள்ளத்தில் அழுந்திய புரவலனுக்குப் புதியதோர் எண்ணம் தோன்றியது.

"கவிராயரே! சுகமுனிவர் இப் பாகவத வரலாற்றைச் சொல்லிப் பரீட்சித்து மன்னவனுக்கு ஏழுநாளில் மோட்சத்தை நல்கினர். தாங்கள் பதினைந்து நாள் இந்தப் பாகவதத் தைச் சொல்லியும் எனக்கு மோட்சம் வரவில்லையே? காரணம் யாது? இவ் வினவுக்குத் தக்க விடை பகரவேண்டும்" என்று வேந்தன் அதிர் வெடி போட்டது போல் கேட்டனன். அங் கிருந்த மக்கள் அனைவரும் புலவர் என்ன விடை விளம்பு வாரோ என்று புலவர் முகத்தைப் பார்த்து நின்றனர். மன்ன வன் வினவுக்கு என்ன விடை கூறுவதென்று அறியாமல் புலவர் திகைத்து நின்றார். சாங்கோபாங்கமாக பாகவதத்தை உபன்னியசித்து நிறைந்த சன்மானம் பெற்று மங்களமாகத் திரும்பும் அந்த வேளையில் பல்லாயிரக் கணக்கான மக்களின் நடுவில் திகைப்புற்று, விழித்த கண்களுடன் வெட்கினின்றனர்.

குமாரி பளீரென்று எழுந்து மன்னவனை வணங்கி, "கற்றவர் புகழும் கொற்றவ! நீர் வினவிய வினவுக்கு நான் விடை பகருவேன். ஆனல் நான் சொன்னபடி நீர் கேட்க வேணும்" என்றாள்.



மன்னவன், "அம்மா! நீ சொன்னபடி கேட்பேன்; என் ஐயம் தீர்ந்தால் போதும். நீ சிறிய பெண்ணாக இருப்பினும் உன் சொல்லைப் பெரியதாக மதிப்பேன். சிறியர் பெரியர் என்று கூறுவதெல்லாம் உடம்பைக் கண்டுதானே? சிறிய உடம்பில் அறிவு நிறைந்த ஆன்மாவும் வசிக்கும். மூன்று வயதுடைய மெய்கண்டாரும்; திருஞானசம்பந்தரும் இந்த உலகை உய்வித்தார்கள் என்பதை நான் அறிவேன். ஆகவே, உன் சொற்படி நான் நடப்பேன்" என்று கூறினர்.

குமாரி, அம்மண்டபத்தில் உள்ள ஒரு கல் தூணில் தன்னைக் கட்டுமாறு மன்னவனிடம் கேட்டுக்கொண்டாள்.

மன்னவன் அவள் விருப்பப்படி அவள் கருத்தை இன்ன தென்று அறிய முடியாமல் அக் குழந்தையை நீண்டதொரு கயிற்றால் தூணில் கட்டி வைத்தனன். கட்டுப்பட்ட குழந்தை குமாரி அங்குள்ள ஒரு மனிதனை அழைத்து மன்னனை ஒரு தூணில் கட்டும்படி கூறினள். அம்மனிதன் மன்னனைக் கட்டு வதற்கு அஞ்சினன். குழந்தை குமாரியின் கட்டளையை நிறை வேற்றுமாறு அரசன் அவனுக்குக் கட்டளையிட்டான். அரசன் ஒருதூணில் கட்டு பட்டு நின்றான். அங்குள்ள அனைவரும் புல வரும் இச் செயலை நோக்கி ஒன்றும் அறியாமல் திகைத்து இருந்தனர்.

குழந்தை குமாரி கொற்றவனை நோக்கி, "உலகம் புரக்கும் உத்தம வேந்தே! பகைவனை வெல்லும் பார்த்திபனே! அஞ்சா நெஞ்சு படைத்த அரசர் கோமகனே! உமக்குப் பல கோடி வணக்கம். கருணைகூர்ந்து கட்டுப்பட்டிருக்கிற என்னை உமது கையால் விடுவிக்கவேண்டும்" என்று வேண்டினள்.

மன்னன், "குழந்தாய்! உன்னை நான் எவ்வாறு விடுவிப் பேன்? நான் இதோ உன்னைப்போல் ஒரு தூணில் கட்டுப்பட்டு கிடக்கின்றேனே? இந்த நிலையில் உன்னை எவ்வாறு விடுவிப் பேன்" என்றான்.

குமாரி, "வேந்தர் பெருமானே! இப்பொழுது நீர் நன்ருக சிந்திக்கவேண்டும். கட்டுப்பட்ட என்னை, கட்டுப்பட்ட நீர் விடுவிக்கமுடியவில்லை அல்லவா? அதுபோல் பந்தபாசத்தால் கட்டுப்பட்டிருக்கிற என் தந்தை, பந்தபாசத்தால் கட்டுப்பட் டிருக்கிற உம்மை எவ்வாறு முத்தியில் சேர்க்கமுடியும். பாச பந்தம் அணுவளவும் இல்லாத சுகர் ஒருவருக்கே அது சாத்தியமாகும்" என்று மன்னன் மனதில் நன்கு பதியுமாறு பதில் கூறினள்.

இதைக் கேட்ட இறைவன் உள்ளந் தெளிவு பெற்றான். "அம்மணி! ஐயம் தீர்ந்தேன். உன் அறிவைப் பாராட்டுகின் றேன்" என்றான். பின்னர் தந்தையைக் கொண்டு தன்னையும் மன்னனையும் கட்டு அவிழ்ப்பித்தாள்.

# க ரு ணை

"எவ்வுயிரும் என்னுயிர் போல் எண்ணி யிரங்கவும் நின்
தெய்வ அருட்கருணை செய்யாய் பராபரமே"

—தாயுமானுர்.

உலகத்திலே மக்கள் பல வகைகளிலும் பலப்பல கருத்துடையவர்களாகவே இருக்கின்ருர்கள். ஒருவர் விரும்புகின்ற உணவை மற்ருெருவர் விரும்புவதில்லை. ஒருவர் விரும்புகின்ற பொருளை மற்ருெருவர் விரும்புவதில்லை. ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு நூலில் அளவு கடந்த விருப்பம். இப்படியாக ஒருவர் மனம்போல் மற்ருெருவர் இருப்பதில்லை. கணவனுக்கும் மனைவிக்கும்கூட கருத்து வேற்றுமைகளுண்டு.

ஆனல் ஒரே ஒரு வகையில் மட்டும் யாருக்கும், எந்நாட்டவருக்கும், எக்குலத்தவருக்கும், எத்தகுதியினருக்கும் கருத்து வேற்றுமை கிடையாது. எல்லோருக்கும் அந்த ஒன்றில் மட்டும் ஒற்றுமைப்பட்ட எண்ணமுண்டு. அது எது?

துன்பமின்றி இன்பமாக இருக்க வேண்டுமென்பது. இதில் யாருக்கும் கருத்து வேற்றுமை கிடையாது. பறவைகளும், விலங்குகளும் இப்படியே எண்ணுகின்றன. ஆனல் துன்பத்தைத் தொலைத்தவர்களும், இன்பத்தை யடைந்தவர்களும் எங்குங் காண்பது அரிதாகவே இருக்கின்றது. அதற்குக் காரணம் துன்பத்தை நீக்கவும் இன்பத்தையாக்கவும் வழிவகை யின்னதென்று திட்டவட்டமாக அறிந்து கொள்ளாததே.

நாம் வயலில் என்ன விதை விதைக்கின்ருேமோ அதுவே விளைந்து வந்து நாம் உண்ணக்கூடியதாக அமைகின்றது அதுபோல் மனதாலும், வாக்காலும், காயத்தாலும் பிற உயிர்களுக்கு நன்மை செய்வோமாயின் நாமும் துன்பமின்றி இன்பமாக வாழ முடியும். அங்ஙனமின்றி பிற உயிர்கட்கு மனவாக்குக் காயங்களால் துன்பமே செய்வோமாயின் அவை அத்தனையும் நமக்கே வந்து சேரும்.

---

அங்கு குழுமியிருந்த மக்கள் அனைவரும் அப் பெண்மணியின் கூர்த்த மதியைக் கண்டு வியந்து பாராட்டினுர்கள். புலவரும் குழந்தை குமாரியைத் தழுவி அகமிக மகிழ்ந்தார்.

இதனல் எரிகின்ற விளக்கே மற்ருெரு விளக்கை ஏற்றும் என்பதும், கட்டில்லாத ஒருவனே இன்னெருவனுடைய கட்டை அவிழ்க்க முடியும் என்பதும் புலனுகின்றன. ஆகவே வீடுபேறு காதலிப்போர் பந்தபாச மற்ற பரம ஞானியரை அடுத்துப் பெறவேண்டும் என்று உணர்க.

---



பிறர்க்கின்னு முற்பகல் செய்யில் தமக்கின்னு
பிற்பகல் தாமே வரும்.

நோயெல்லாம் நோய்செய்தார் மேலவாம் நோய்செய்யார்
நோயின்மை வேண்டுபவர்.

என்பார் திருவள்ளுவர்.

நோயென்பதற்குத் துன்பமென்பது பொருள். ஆகவே நாம் பிற உயிர்கட்குத் துன்பம் செய்வோமாயின் அது நமக்கே துன்பத்தைச் செய்து கொண்டவர்களாக ஆகின்ருேம். எனவே நாம் துன்பமின்றி வாழ விரும்புவோமாயின் நாம் பிறஉயிர்கட்கு நிச்சயமாக துன்பஞ் செய்யக்கூடாது. இனி உயிர்களுக்குத் துன்பஞ் செய்யாமல் இருப்பதோடு அமைந்து விடக்கூடாது. இன்பமும் செய்யவேண்டும். பிற உயிர்கட்கு இன்பஞ் செய்வோமாயின் அது நமக்கே இன்பமாக அமையும்.

மன்னுயிர் ஓம்பி அருளாள்வார்க்கு இல்என்ப
தன்னுயிர் அஞ்சும் வினை.

என்கின்ருர் திருவள்ளுவனர். ஆகவே எக்காலத்தும்தன்னுயிர் போல் மன்னுயிரை எண்ணி அவைகளுக்கு வரும் இடையூற்றை நீக்கி நன்மை புரிய வேண்டும்

நம்முடன் பழகும் பசு, எருது, எருமை, ஆடு, கோழி முதலிய உயிர்கள் நமக்குப் பல வகையிலும் உதவி புரிகின்றன. எருது உழுவதற்கும், பசு பாலும், சாணமும் கொடுத்தும் பயன் படுகின்றன. ஆடு கம்பளத்திற்கு ரோமமும், வயலுக்கு எருவும் தருகின்றன. கோழி மணிக்கூண்டில் அலாரம் வைத்ததுபோல் வைகறையில் நம்மைத் துயில் உணர்த்துகின்றது. இங்ஙனமாக இந்தப் பிராணிகள் நமக்கு உதவி புரிகின்றபோது அவைகளுக்கு நாம் செய்கின்ற உதவி என்ன என்பதைச் சிந்திக்கின்ருேமா? உபகாரம் செய்யவில்லையானலும் அபகாரமாவது செய்யாமலிருக்கின்ருேமா?

கழுத்தில் புண் உள்ள மாட்டை வண்டியில் கட்டி ஓட்டுவதும், ஓடுகின்ற மாட்டை மேலும் வேகமாக ஓட வேண்டுமென்று இரும்பு முள்ளால் குத்துவதும், அளவுக்கு மேற்பட்ட சுமையை வண்டியில் இட்டு எருதுகளை இழுக்குமாறு இம்சிப்பதும், மாடுகளுக்குப் போதுமான புல் முதலிய உணவுகளைத் தாராமல் பட்டினி போடுவதும், எல்லையின்றி அவைகளுக்குத் தொல்லைகொடுத்து வேலை வாங்குவதும், கோழிகளைத் தலைகீழாகக் கொண்டு போவதும் கொடுமையினும் கொடுமை. இவைகளை நினைத்தால் கல்லும் கரையுமே! சிலர் மனம் கல்லினும் வலியதாக இக்கொடுமைகளை எவ்வாறு செய்யத் துணிகின்றதோ?

உ

முருகா

# யாத்திரை

(அன்பன் மு. பெருமாள்)

(உஎஉ-ம் பக்கத் தொடர்ச்சி)

தண்டித்தால் மட்டும் திருந்திவிடுவார்களா? தண்டிக்கப் பட்டவர்கள் யாவரும் தவறு செய்யாமலா இருக்கின்ருர்கள்? மனிதனைக் குற்றம் புரியும்படித் தூண்டுவது வறுமையும், சோம்பலும், பேராசையுந்தான். இவைகளை நன்ருய் மனதில் உணர்ந்து அவர்கள் திருந்தும்படியான தண்டனையாக இருக்க வேண்டும். தவறு செய்தவர்களை தண்டிக்கவேண்டியது தரும நியாயந்தான். இந்த வழக்கில் அவர்கள் கடுமையான குற்றம் செய்யாதவர்கள். எனவே எச்சரித்துவிடுங்கள். மீண்டும் செய்வார்களாயின் அவர்களைக் கடுமையாகத் தண்டியுங்கள் என்று நடராஜன் கூறி அந் நால்வர்களையும் விடுவித்தான்.

நடராஜனது இந்த உயர்ந்த கருணை உள்ளம் அவர்கள் நால்வரையும் மனம் உருகச்செய்து நல்லவர்களாகத் திருந்த வைத்துவிட்டது. இந்த சமயம் மக்கள் யாவரும் ஐயோ! குய்யோ! தீ பிடித்துவிட்டது; தீ! என்று கூறிக்கொண்டே தெருக்கோடியை நோக்கி விரைந்து ஓடினர். நடராஜன், சப் இன்ஸ்பெக்டர், சேவகர்கள் யாவரும் அங்கு விரைந்து சென்றனர். பெருந்தீ மூண்டு பத்து வீடுகள் சாம்பலாகிவிட்டன.

---

உயிர்களுக்கு நாம் செய்யும் துன்பம் செய்த அளவே நம்மை வந்து சாருமென்று எண்ணக்கூடாது. நாம் செய்யும் துன்பம் பன்மடங்காக அதிகரித்து வந்து சாரும். இச்சைபோல் திரியும் பசுங்கிளியைப் பன்னிரண்டு நாள் கூட்டில் அடைத்த பாவத்தினுல் மறுபிறப்பில் பன்னிரண்டாண்டு சிறைச்சாலையிலிருந்து கோபன்ன (ராமதாஸர்) வேதனைக்கடலில் வீழ்ந்து துன்புற்றனர். இங்ஙனம் கருணையின்றி பிற உயிர்களுக்குத் துன்பஞ் செய்தவர்கள் பலர் ஒன்றுக்குப் பன்மடங்காகத் துன்புற்றவர்கள்.

ஆகவே துன்பமின்றி இன்பமாக வாழ நினைக்கும் ஒவ்வொருவரும் எந்த உயிர்கட்கும் எக்காலத்தும் எவ்விடத்தும் எவ்வாற்ருனும் துன்பத்தை விளைக்காமல் இன்பமே செய்து இம்மைக்கும் மறுமைக்கும் நன்மை தேடுவார்களாக.

அப்பா நான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்
ஆருயிர்கட் கெல்லாம் நான் அன்புசெயல் வேண்டும்

—இராமலிங்கர்.



மேலும் அணைக்கமுடியாமல் அடிமுட்டாள்கள் கோபம் போல் வெகுண்டு வீசியது தீ. அதில் சிக்கிய குழந்தைகளையும், பெண்களையும், வயோதிகர்களையும் பாய்ந்து புகுந்து மீட்கும் பணியில் யாவரும் ஈடுபட்டனர். நடராஜனும் சுறுசுறுப்பாகப் புகுந்து பலரைத் தீயின் மத்தியிலிருந்து மீட்டு அப்புறப் படுத்தினுன். அதில் ஒரு பெரியவர் பூஜை அறையில் வழிபாடு செய்த வண்ணமிருந்தவர் தீயில் சிக்கித் திணறுவதைக் கண்டு அவரையும், விக்கிரகங்களையும் அப்புறப்படுத்த அரும்பாடுபட்டான். அதனுல் தீயில் கடுமையாகத் தாக்குண்டு மூர்ச்சித்து வீழ்ந்தான். அக்கணமே ஆம்புலன்ஸ் கார் விரைந்து எடுத்து அவனையும் காயப்பட்ட மற்றவர்களையும் ஆஸ்பத்திரியில் விடுத்து அவசர சிகிச்சை செய்வித்தனர்.

நடராஜன் நான்கு நாட்களாக நினைவில்லாமல் ஆஸ்பத்திரி படுக்கையில் கிடந்தான். உயிருக்கு ஆபத்தில்லை என்பதை உணர்ந்த டாக்டர்களும், சப் இன்ஸ்பெக்டர் சங்கரனும் அடிக்கடி வந்து சிகிச்சை செய்துகொண்டிருந்தனர். நடராஜன் முருகா! முருகா! என்று முனகிக்கொண்டிருந்தானே ஒழிய மூர்ச்சை தெளிந்தபாடில்லை. பக்கத்துப் படுக்கையில் கிடந்த நோயாளி வலி தாங்கமுடியாமல் வாய்விட்டு கந்தரநுபூதியைப் பாராயணம் செய்தவண்ணமிருந்தார். மருந்துகள் பல சிகிச்சையால் தெளியாத நடராஜன், மாமந்திரமாம் கந்தரநுபூதி பாராயணச் சொல் காதில் விழ மெல்ல மெல்லத் தெளிவு நிலை அடையலானுன்.

"மின்னே நிகர் வாழ்வை விரும்பிய யான்
என்னே விதியின் பயனிங் கிதுவோ!"

என்று கூறும் போது திடீரென எழுந்து கண்ணைத் துருவிய வண்ணம் படுக்கையில் எழுந்தமர்ந்து என்ன! நாம் எங்கே இருக்கின்ருேம்! ஐயோ! கை கால்கள் யாவும் கட்டுக் கட்டப் பட்டுள்ளதே! நாம் ஏன் இங்கு வந்தோம்! என்று சுற்றிலும் உற்று நோக்கினுன். ஆஸ்பத்திரி என்பதை அறிந்தான். அச்சமயம் இரவு மணி 10. அவனுக்குச் சிகிச்சை காவல் செய்த நர்ஸ் அருகில் ஓடிவந்து, என்ன வேணும்? வலிக்கின்றதா? நினைவில்லாமல் இருந்த தாங்கள் மூர்ச்சைதெளிந்து எழுந்தது மிக்க நல்லது. இனி ஒன்றும் கவலைப்படாதீர்கள். குறுகிய காலத்தில் குணமடைந்துவிடுவீர்கள் என்று அவனுக்கு உபசாரம் கூறினுள்.

பாடிக்கொண்டிருந்த நோயாளி இதைக் கண்டதும் பாட்டை நிறுத்திவிட்டான். நடராஜன் அவரைப் பார்த்து ஐயா! தயவு செய்து அந்த வேதமந்திரமாம் கந்தரநுபூதியைப் பாடிப் பணியுங்கள். அத் திருமந்திர ஓசையால்தான் என் நினைவு தெளிந்தது என்று வேண்டினுன். இதனைக் கேட்ட

நர்ஸ் நம் சிகிச்சை இவரைத் தெளிவிக்கச் செய்யவில்லை போலும்! இந்தத் தெய்வப்பாடல்தான் இவரைத் தெளிவுபெற வைத்துள்ளது. இவர் மிக்க தெய்வபக்தியுள்ளவர் என்பது இதனால் தெரிகின்றது. என்று மகிழ்ந்து மீண்டும் அவரைப் பாடும்படி அனுமதித்தாள். ஐம்பத்தொன்றும் முடிந்தது. கந்தர்கலிவெண்பா, சண்முக கவசம், திருவாசகம் முதலானவைகளைப் பாடவைத்துப் பாராயணஞ் செய்து பரவசம் அடைந்தான் நடராஜன். அங்ஙனம் பாடியவர் யார் என்று அறியமுயன்றபோது, தன்னை ஏமாற்ற முயன்ற நால்வர்களில் ஒருவர் என்பதையும், அவர்கள் நால்வரும் தீ விபத்தில் சிக்கியவர்களை மீட்கையில் தீயில் காயமடைந்ததாகவும், மூவர் சிகிச்சை பெற்று குணமடைந்து வீட்டுக்குச் சென்றுவிட்டதாகவும், தனக்குமட்டும் அதிகக் காயத்தால் குணமாகவில்லை என்றும் கூறக் கேட்டு அளவற்ற மகிழ்ச்சி அடைந்தான் நடராஜன்.

அன்பனே! நீங்கள் நால்வரும் நல்லவர்களாகத் திருந்தி தீ விபத்தில் மீட்சித் தொண்டாற்றியது குறித்து அளவற்ற ஆனந்தமடைகின்றேன். முருகவேள் பெருமான் கருணை முன் நின்று தங்கள் நால்வருக்கும் சகல முன்னேற்றத்தையும் வழங்கப் பிரார்த்திக்கின்றேன்; என்று கூறி நடராஜன் நனி மகிழ்ந்தான்.

நடராஜனுக்குச் சிகிச்சை செய்துவரும் நர்ஸ் மிக்க அன்புடன் கண்ணுங் கருத்துமாகக் கவனித்து உபசரித்து வந்தாள். அவனை வேறு வார்டுக்கு மாற்றியும் அவள் அடிக்கடி வந்து பாலும் பழமும் தந்து விசேஷமாக உபசரிக்கலானாள். அவள் உள்ளத்தில் காதல் வளர்ந்துவந்தது. இவரை நாயகராகப் பெறவேண்டும் என்று முடிவுசெய்து நடராஜனது வரலாறுகளைச் சிறிது சிறிதாக அறிய முயன்று வந்தாள். நடராஜன் உள்ளத்தில் இறைவன் அன்பு வழிபாட்டைத் தவிர வேறு எதுவும் குடிபுகுந்திட முடியவில்லை. இதை அறியாத அந்த இளம் மங்கை மனதில் கதைகளில் கூறும் கற்பனை ஊற்றென காதல் வளர்ந்துவந்தது.

(தொடரும்)

உ
குருவே துணை

# ஏகத்தாள் இதழகல் அந்தாதி

[ தி. செ. முருகதாச பிள்ளை, பழநி ]

காப்புச் செய்யுள்

சேயே கத்தாளி தழகலந் தாதி செயச்செய்திரே
சேயே கத்தாளி தழகலந் தாதி செயச் செய்திரே
சேயே கத்தாளி தழகலந் தாதி செயச் செய்திரே
சேயே கத்தாளி தழகலந் தாதி செயச் செய்திரே

பதப் பொருள்

சேயே—பிள்ளைவருக்கங்களில் சிறந்த விநாயகரே! கத்து - பிரமகபாலத்தின், ஆளி - ஆள்கையுடைய சிவபிரானே! தழு- ஆலிங்கனம் செய்கின்ற (தழுவுகின்ற), அகலம் - மார்பினிடத்து, தாதி - தனது அடிமைப் பெண்ணாகிய திருமகளையுடைய திருமாலே! செய் - தவத்தோர் பாவனை செய்கின்ற, அச்சு—திருமேனி (திருவுருவை) எய்து — கொண்டருளுகின்ற, இரே — வியாபகப் பொருளே! சேய் - தூரத்தில், ஏகு - செல்கின்ற, அத்து - செம்மைப்பொருளான சூரியனே! ஆளி — சிங்கவாகனத்தை, தழு - அங்கீகரித்த (ஏற்றுள்ள), அகல் - விருத்தியடைகின்ற, அம் - அழகுடைய, தாதி - சத்த தாதுக்களுக்கு உறைவிடமான பராசத்தியே! செய் — சிவப்பினது, அச்சு — அடையாள முள்ளவைகளெல்லாம், எய் — இளைக்கத் தக்க, திரே - மேன்மையும், சேயே — செவ்வாயென்னும் கோளும், கம் — சுவர்க்கலோகத்துக்கு வேண்டிய, தாள்-முயற்சியும், இதழ் - இதழ்களையுடைய பூமாலைகளும், கல் — மலைகளும், அந்து — பொருத்தமான, ஆ - வியப்புள்ள, தி — அறிவுத் தன்மையும், செய - வெற்றிக்கு, செய்-விளைநிலம்போன்ற, திரு - தெய்வீகமும், ஏ - பொருந்திய, சேய் - முருகக்கடவுளைக் குறித்த, ஏக - ஒன்றினைப் போன்றுள்ள, தாள் - அடிகள் (நான்குடன்) கூடிய, இதழகல் - இதழ்கள் (உதடுகள்) படிக்குங் கால் அகன்றிருக்கும் முறையிலுள்ள, அந்தாதி—அந்தாதியாகிய இந்நூலை, செய - பாடும்படி, செய்திர் - அருள் புரியுங்கள். எ-று. ஏ-அசை.

கருத்துரை

விநாயகரும், சிவபெருமானும், விட்டுணு மூர்த்தியும், குரு என்றும் பரம் என்றும் நிதானிக்கப்படாமல் பாவனைப்படி விளங்கும் வியாபகப் பொருளும், சூரியனும் பராசக்தியும் ஆகிய நீங்கள்; சமானமில்லாத செந்நிறத்தையும், அங்காரகனென்னும் கிரகத்தையும், தேவலோகம் உய்வதற்கான முயற்சியையும், பல பூமாலைகளையும், மலைகளையும், இசைவான

வியப்புற்ற பேரறிவையும், செயம் விளக்கின்ற நிலம் போன்ற தெய்வீகத்தையும், உடைய முருகக் கடவுளைக் குறித்த ஏக பாதத்து இதழகல் அந்தாதி நூலைப் பாடும்படி எனக்கு அருள்புரியுங்கள் என்பதாம்.

ஞாயம்

சண்மதங்களையும் சண்முகமாக உணர்ந்த கௌமாரன் பாடும் பிரபந்தம் ஆதலின் அங்ஙனம் உள்ள ஆறு மூர்த்திகளையும் வேண்டியவாறும், அவற்றுள் ஒன்றன்றோ கௌமார சமயம் என்னில்? அதன் முடிவான குருத்துவமும் அளவுபடாப் பொருள் ஆதலின் சமயாதீதத்திற் கட்டிப் பிரித்துக் கொண்டது போலக் காட்டியவாறும், அதனால் அம் மூர்த்தியின் வணக்கமும் தோற்றுதுற்றவாறும், சண்மதங்களின் விவரம் சொல்வார் சிலர் காபாலிகத்தைச் சேர்த்துக் கொண்டு கௌமாரத்தைக் கழிப்பதுண்டு. ஆயினும் அது சைவத்தின் பிரிவேயாதலின், அதை விடுத்து சருவமதசம்மதமான குருத்துவப் பிரதிபாத்திய முள்ள இதனைக் கூட்டப்பட்டவாறும் அதற்குப் பிரமாணம் வேதத்தின் அஞ்சுருணியான வைதிகமார்க்கத்தோர் அநுட்டிக்கின்ற பஞ்சமூர்த்தி உபாசனையே யென்பதும் திண்ணம்.

இங்ஙனம் பலவாறு கூறினும் ஆறு சமயங்களையும் அங்கமாகக் கொண்டவற்றால், தெய்வம் ஒன்றென்றே விளங்கியவாறும், அதனால் சகுணப் பிரம்ம உபாசனை உள்ளபோதே சமயாதீத சமரசத்தை அறிவதற்கான மார்க்கம் அந்தக் கௌமாரமேயாகின்றவாறும், பிறவும் அறிக.

இலக்கணம்

பண்பு நோக்கி மூர்த்திகள் வகுக்கப்பட்டன. "தாதி" என்ற சொல்லுக்கு, பூந்தாதில் அளைகின்ற இலக்குமி என்று கூறினும் அமையும். அன்றியும் சூலபாணி–பரசுபாணி என்ற விதிவழி, தாதியை உடையவனை (திருமாலை) அங்ஙனம் கூறப்பட்டதென்னினும் தகும். பாவனை, மனத்தின் தொழிலாதலால், "செய்" என்ற சொல்லை அதற்கு உபயோகப்படுத்தப் பட்டது.

அன்றியும், செயல் என்ற சொல்லின் விகாரமாக்கி ஒழுக்க முறை எனக்கொள்ளவும் கூடும். ஏகாரம் இரண்டிடத்தில் விளிமையாயும், இரண்டிடத்தில் எண் கூட்டுப் பொருளாயும் வந்தமை பற்றி மயங்காமல், வேறு வேறுழி என்றும், அப்பதம் அவ்வுழி அப்பொருள் தரினே விரோதமென்றும் அறிய வேண்டுவது. இருவே-திருவே என்ற பதங்கள், இரே திரே என வந்தவாறும், "வேறொரு பொருளை விளக்குமாயின் கூறியது கூறினும் குற்றமில்லை." என்ற விதிப்படி முற் கூறிய "செய்" என்ற பகுதியை யுடைய "செய்ய" என்றும்



செய்திர் என்றும் உள்ள பதங்களை வாக்கின் தொழிலாகிய பாடுதலுக்கும் கருணைப் பகுதியாகிய அநுக்கிரகத்திற்கும் உபயோகப்படுத்தியிருப்பதும் அறிக.

இவற்றுள், பிற்பகுதி அவ்வுழி மற்றொரு அடியினும் அப் பொருள்குறித்ததன்று என்பதும் காண்க. இங்ஙனம் விரிப்பிற் பெருகும் என்று சுருக்கினம். ஆதலின், அழுக்காறின்றி அருமைபாராட்டும் பெரும் புலவர் முகத்திற் கேட்டுத் தெரிதல் கடமையாம்.

---

## திருவருட்பா

### (செல்வச்சீர்த்தி மாலை)

காயா தளியக் கனிந்தன்பாற் கல்லா லடிநின் றருளொழுகுங்
கனியுட் சுவையே யடியர்மனக் கவலை யகற்றுங் கற்பகமே
ஓயா துயிர்க்கு ளொளித்தெவையு முணர்த்தி யருளு மொன்றேயென்
உள்ளக்களிப்பேயைம்பொறியு மொடுக்கும்பெரியோர்க்கோருறவே
தேயாக் கருணைப் பாற்கடலே தெளியா அசுரர் போர்க்கடலே
தெய்வப் பதியே முதற்கதியே திருச்செந் தூரிற் றிகழ்மதியே
தாயா யென்னைக் காக்கவருந் தனியே பரம சற்குருவே
தணிகா சலமாந் தலத்தமர்ந்த சைவ மணியே சண்முகனே.

முருகா வெனநின் றேத்தாத மூடரிடம்போய் மதிமயங்கி
முன்னு மடவார் முலைமூகட்டின் முயங்கி யலைந்தே நினைமறந்தேன்
உருகா வஞ்ச மனத்தேனை யுருத்தீர்த் தியம னெருபாசத்
துடல நடுங்க விசிக்கிலவற் குரைப்ப தறியே னுத்தமனே
பருகா துள்ளத் தினித்திருக்கும் பாலே தேனே பகரருட்செம்
பாகே தோகை மயில்நடத்தும் பரமே யாவும் படைத்தோனே
தருகா தலித்தோன் முடிகொடுத்த தரும துரையே தற்பரனே
தணிகா சலமாந் தலத்தமர்ந்த சைவ மணியே சண்முகனே.



# பெண்

: ஆசிரியர் :

பெண் என்ற சொல்லுக்குப் பேணுந்தன்மை யுடையவள் என்பது பொருள். கணவனையும், குடும்பத்தையும், மக்கள், வீடு, மாடு முதலியவைகளையும் பேணிப் பெருமைப்படுத்து கின்றவள் பெண்.

தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண். —திருக்குறள்.

இந்த உலகத்தையே பெண்ணாக (அன்னையாக)க் கருதுவது மரபு. 'இந்தியத் தாய்','பாரத மாதா' என்று கூறுவது பெரு வழக்கு. கிராமத்தையும் கிராமதேவதை யென்று கூறுவர்.

இனி, செல்வத்தை லட்சுமியென்றும், கல்வியைக் கலைமக ளென்றும், மண்ணை பூதேவி யென்றும், தண்ணீரை கங்கா தேவி யென்றும், வானத்தை ஆகாயவாணி யென்றும், அன்னத்தை அன்ன பூரணி யென்றும், பேசும் மொழியைத் தாய்மொழி யென்றும், வாழும் நாட்டை தாய்நாடு என்றும், இப்படி எல்லாவற்றையும் பெண்ணாகவே உருவகம் செய்து பெருமை கொள்வார்.

பெண்மையில் கற்பென்னுந் திண்மை அமைந்துளது. அது கல்லினும் வலியது. அகலிகையின்பால் கற்பின் திண்மை சிறிது குறைந்தபடியால் திண்மை மிக்க கல்லுரு வாகுமாறு ஐந்தவித்து ஆற்றல் மிக்க அடிகளார் கட்டளை யிட்டனர்.

விண்ணுலகத்திற்கும், மண்ணுலகத்திற்கும், உயிர்நாடி யாக விளங்குவது பெண்ணுலகமே யாகும். உலக நலன்களத்த னையும் பெண்மையில் அமைந்து கிடக்கின்றன. பெண் கரு ணைக்கும் பொறுமைக்கும் உறைவிடமாக விளங்குகின்ருள். அதனாலன்றோ பிள்ளைப் பேற்றை இறைவன் பெண்ணிடமே அமைத்தனன். ஞானத்தையும் பெண்ணாகக் கூறுகின்றது ஞானநூல். "சத்திதான் யாதோ வென்னில் தடையில்லா ஞானமாகும்".

இல்வாழ்க்கைக்கு அச்சாணியாக இருந்து துணைபுரிபவள் பெண். இல்லினை ஆள்பவள் ஆதலின் இல்லாள் எனப் படுகின்ருள். மனைக்குரியவள் மனைவி. ஆடவனை இல்லா னென்றும், மனைவனென்றும் கூருமையாலும், "பொற்ருலி யோடு எவையும் போம்" என்ற திருவாக்காலும் பெண்ணின் பெருமை நன்கு வலியுறுகின்றது.



மேலும், இறைவனோடு இரண்டறக் கலக்கும் அத்துவித இன்பம் ஆன்மா பெண் தன்மையடைந்த காலத்தேயே கிட்டு கின்றது என்பதை உணர்க. இறைவனைத் தலைவனாகவும், ஆன்மாவைத் தலைவியாகவும், வைத்து அன்பு செய்கின்ற நெறி சன்மார்க்கமாகும். இந்நெறி நின்றே நால்வர்களும், ஆழ்வார்களும், அருணகிரிநாதரும், தாயுமானரும் முத்தி இன்பம் பெற்றனர். அவர்களுடைய அமுதமன்ன பாடல் களால் இதனையறிக.

உலகத்தில் தலை சிறந்தவர்கள் பத்தினிப் பெண்களும் பக்தர்களும் தத்துவஞானிகளும் ஆவார்கள். இம் மூவர்களா லேயே உலகங்கள் நிலைபெறுகின்றன. இம் முத்திறத்தார்க ளுள்ளும் பத்தினிகளே முதன்மையானவர்கள். "பத்தினி பக்தர்கள் தத்துவ ஞானிகள்" என்பார் திருமூலர். சிறப் புடைப் பொருளை முந்துறக் கிளத்தல்" என்ற சூத்திரப்படி பத்தினிப்பெண்டிர் முன்னணியில் நிற்பதைக் காண்க. பத்தர் களையும் முத்தர்களையும் பெற்று உலகிற்கு வழங்குபவர் பத்தினிகளே யாவார்கள். உத்தமிகள் உதரத்தில் உதித்த முத்துக்களே எத்தலமும் போற்றும் வித்தகர்களாவார்கள்.

மைத்திரேயி, காத்தியாயனி, கார்க்கி, ஔவையார், காக்கைப் பாடினியார், நச்செள்ளையார், மங்கையர்க்கரசியார், புனிதவதியார், திலகவதியார், ஆண்டாளம்மையார், முதலிய பெண்மணிகள் விண்மணிகள்போல் விளங்கி உலகை உய்வித் தனர்.

கற்புடைய காரிகையர்களை மூவரும் தேவரும் போற்று வார். கற்புடையாரைக் கண்டு கனலும் அஞ்சும். கதிரவன் வரவு தடைபடுதலும், விண் மழை பொழிதலும், மாண்ட உயிர் மீண்டு வருதலும் கற்பினுல் நிகழும்.

கற்புடைய மாதர் கணவனை யன்றி வேறு ஒன்றையும் விரும்பார். ஆடவரும் இறைவனை வீடுபேறும் வேண்டாது கூடும் அன்பினுலேயே கும்பிடுதல் வேண்டும்.

கணவனையே விரும்பி அரண்மனையையும் அரச வாழ்வை யும் துறந்து வந்த சீதை, ஒரு கணம் பொன்மானை விரும்பிய சின்னஞ் சிறு பிழையால் பத்துமாதங்கள் துன்புற்றனள். எனவே பெண்மணிகள் கற்பு நெறி நின்று கணவனையே பேணி எழுபிறப்பும் இன்பம் பயக்கும் பழிபிறங்காப் பண்புடை மக்களைப் பெற்று உலகிற்கு உதவி புரிதல்வேண்டும்.

நாயகனையே விரும்பிய நங்கையர் நலமுறுவர் என்பதனை அடியிற்கண்ட வரலாறு விளக்கும்.

பிறன்மனை நோக்காத பேராண்மையும் போரிற் புறங் கொடாத பேராராண்மையும் உடைய ஒரு மன்னனுக்கு ஐம்பது

மனைவியர் இருந்தனர். அவர்கள் ஒருமைப்பட்ட மனமுடைய பெருமையுடையராய் சிறுமையின்றி செந்நெறி நின்றனர்.

ஒருநாள் காவலன் கடல் கடந்து செல்லுபவனாய் ஒவ்வொரு மனைவியரையும் தனித்தனியே கண்டு, "நான் தூர தேயம் செல்கின்றேன்; உனக்கு என்னவேண்டும்?", என்று கேட்டான். முதல் மனைவி பட்டாடை வேண்டும் என்றாள். இரண்டாம் மனைவி அணிகலன்கள் வேண்டுமென்றாள். மூன்றாம் மனைவி முத்தாரம் வேண்டுமென்றாள். நாலாம் மனைவி நாகமணி வேண்டுமென்றாள். இங்ஙனம் ஒவ்வொருவரும் ஒவ்வொரு பொருளை விரும்பிக் கேட்டனர். அரசன் அவைகளை முறையே குறிப்புத்தாளில் குறித்துவைத்துக் கொண்டனன். ஐம்பதாவது மனைவியின்பால் சென்று உனக்கென்னவேண்டுமென்று வினவினன். அவள் கணவன் பதமலரைப் பணிந்து கண்ணீர் மல்கி நின்று, "ஆர்வலரீர்! அலைகடல் சூழ்ந்த நிலவுலகில் யான் விரும்பத்தக்க பொருள் வேறொன்றுமில்லை. தங்கள் திருவடி ஒன்றே வேண்டுமென்றாள். மன்னன் குறிப்புத்தாளில் திருவடியென்று குறித்துக் கொண்டான்.

கடல் கடந்து தன் அலுவல்களை முடித்துக்கொண்டு திரும்பிய மன்னவன், மனைவியர்கள் விரும்பிய பொருள்களைத் தனித்தனிப் பெட்டியில் வைத்து அதன் மீது அவர்கள் முகவரி எழுதி அவரவர்பால் அநுப்பினன். ஐம்பதாவது மனைவிபால் அவன் சென்று அவளை மகிழ்வித்தான். அவள் மனையில் இருந்த வண்ணம் அரசவைக்குப் போவதும் வருவதுமாக இருந்தான்.

தங்கள் மனைக்கு வேந்தன் வாராமல், இளையாள் இல்லத்திலேயே இருப்பதைக் கண்ட ஏனைய இல்லக்கிழத்தியர், "**மனைவியர் மாநாடு**" கூடி கணவனாரைக் கண்டு கண்டிக்க வேண்டும் என்று முடிவு செய்து முடிமன்னவன்பால் வந்து பணிந்து, "மன்னவரே! நாங்கள் எப்பிழை செய்தோம்? அயல் நாடு சென்று மீண்ட தாங்கள் எமதில்லம் வராதொழிந்த காரணம் யாது?" என்று வினவினர்.

மன்னன், "மங்கைமீர்! இக் குறிப்புத்தாளைக் காண்மின். நீங்கள் விரும்பியதை விரும்பியவாறு வழங்கினேன். இவ் விளையாள் என் திருவடி ஒன்றையே விரும்பினாள். திருவடியை விரும்பியவள் வீட்டில் திருவடி தங்கியுளது" என்று இயம்பினன்.

அது கேட்ட அரிவையர்கள் நாணி நாயகனைத் தொழுது, "இனி நாங்களும் உமது திருவடி ஒன்றையே விரும்புவோம்" என்று கூறி கணவனை அடையப் பெற்று இன்புற்றனர்.

கீழ்வரும் அன்பர்களிடம் சந்தாத் தொகையைச் செலுத்தி ரசீது பெற்றுக்கொள்ளலாம்.

**திரு. செ. பாலசுப்பிரமணிய பிள்ளை**, 25, மேலக்கோபுரத் தெரு, மதுரை.
,, **ரா. ப. சாமிக்கண்ணுபிள்ளை**, 32, செட்டிபேட்டைத்தெரு, உறையூர்.
,, **L. A. பரமன்செட்டியார்**, இந்தியன்பாங்கு, பெரியகடைவீதி, திருச்சி.
,, **வி. சங்கரன்பிள்ளை**, 66, சொக்கலிங்கமுடுக்கு, திருநெல்வேலிடவுன்.
,, **வி. திருஞானசம்பந்த முதலியார்**, மெய்கண்டார் கழகம், மண்டபத் தெரு, காஞ்சிபுரம்.
,, **R. ஷண்முக முதலியார்**, காரியதரிசி, ஷண்முகனடியார் சங்கம், மெயின் பஜார், வேலூர் N.A.
,, **ஜெ. மு. சாமி**, 145, கீழ மாசி வீதி, மதுரை.
,, **K. V. நடராஜ முதலியார்**, ஜவுளி வியாபாரம், ஈரோடு.
,, **அரு. லெ. வெ நடராஜன் செட்டியார்**, 232, ராஜவீதி, கோயம்பத்தூர்.

## நமது வெளியீடுகள்

| | விலை | தபாற்செலவு |
|---|---|---|
| கம்பன் கவிமணி | 3—0—0 | 1—0—0 |
| வடநாட்டு யாத்திரை | 1—4—0 | 0-10—0 |
| கந்தரநுபூதி விரிவுரை | 1—0—0 | 0-10—0 |
| தூபி நீராட்டு விழா நினைவு மலர் | 0-12—0 | 0—8—0 |
| சுந்தரமூர்த்தி நாயனர் புராணம் | 0—8—0 | 0—8—0 |
| பவளேந்திரி (கற்புநெறியின் கதை) | 0—8—0 | 0—8—0 |
| கூட்டு வழிபாடு | 0—8—0 | 0—8—0 |
| சிந்தனைத்தேன் | 0—6—0 | 0—8—0 |
| பாராயணத் திருப்புகழ் | 0—6—0 | 0—8—0 |
| திருக்குறள் திரட்டு | 0—4—0 | 0—8—0 |
| தியாகம் | 0—2—0 | 0—7—0 |

### வரப்பெற்றோம்

**அறநெறி**: திங்கள் வெளியீடு. ஆசிரியர்: சிவ. முருகசிவம் ஆண்டு சந்தா ரூ. 3—0—0. தனிப்பிரதி 0—5—0.

கிடைக்கும் இடம்:— அறநெறி அலுவலகம், 75, நைனியப்பன் தெரு, மண்ணடி, சென்னை-1.

